20th March 1961]

ஆகிய நான்கு இடங்களிலும் "போரிங்" செய்து பார்க்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஏற்கனவே மதிப்பிற்குரிய திரு. ராமசுவாமி முதலியார் அவர்கள் அப்பொழுது ரிபோர்ட்டு தயாரிக்கும்பொழுது ரூ. 9.98 கோடி செலவாகும் என்று சொன்னார்கள். பிற்பாடு அரசாங்கம் பரிசீலனைசெய்து, கமிட்டி முதலியவைகளும் பரிசீலனை செய்து பார்த்ததில் ரூ. 26 கோடி ஆரம்பத்தில் செலவாகும், ரூ. 30 கோடி வரையிலும் போகும் என்று சொல்லுகிறார்கள். இம்மாதிரி "போரிங்" போட்டுப் பார்த்து எவ்வளவுக்கு எவ்வளவு செலவைக் குறைக்க முடியும் என்பதைத் தெரிந்துகொள்ள இவர்களைக் கூப்பிட்டுப் பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறோம்.

SRI S. M. ANNAMALAI : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தூத்துக்குடி துறைமுகம் மட்டும் தான் எடுத்துக் கொள்ளப்படும், சேது சமுத்திர திட்டம் எடுத்துக்கொள்ளப்படாது என்பது உண்மையா? அப்படியானால், மூன்றாவது திட்டத்தில் சேது சமுத்திர திட்டத்தையும் சேர்த்து அமைப்பதற்கு இந்த சர்க்கார் என்ன முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் ஏற்கனவே தூத்துக்குடி துறைமுகத் திட்டம் எடுத்துக் கொள்ளப்படாது என்று சொன்னார்கள். இப்பொழுது இரண்டு திட்டங்களையும் சேர்த்து இணைத்து எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறார்கள். முதலில் தூத்துக்குடி திட்டம், பிற்பாடு சேது சமுத்திரத் திட்டம் எடுக்க வேண்டுமென்பது தான் அரசாங்கத்தின் நோக்கம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI A. VEDARATHNAM : இப்படி பெரிய தொகை செலவழிப்பதற்கு நம்முடைய மாநிலத்தில் நிதி வசதி உண்டா ? இதற்கு மத்திய அரசாங்கத்தினுடைய உதவி ஏதாவது கிடைக்குமா ? அப்படியானால், எவ்வளவு கிடைக்கும் என்பதைத் தயவு செய்து அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : எவ்வளவு உதவி கிடைக்கும் என்பது பற்றி தகவல் என்னிடம் இல்லை. கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்ல முடியும்.

### *Treasury Office (Panruti).*

* 934Q.—SRI S. THANGAVELU : கனம் ரெவினியூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கடலூர் தாலுகா பண்ருட்டியில் கஜானா அலுவலகம் நிரந்தரமாக அமைத்தல் விஷயமாக அரசாங்கத்தினிடம் ஏதேனும் திட்டம் பரிசீலனையில் இருக்கிறதா ?

(இ) அப்படியானால், எப்போது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI S. THANGAVELU : கஜானாவை நிரந்தரமாக அமைக்க வேண்டுமென்று மாவட்ட கலெக்டர் மூலமாகவும், பொது மக்கள் சார்பிலும், மண்டல காங்கிரஸ் கமிட்டி சார்பிலும் விண்ணப்பங்கள் அரசாங்கத்துக்கு வந்திருக்கின்றன. மீண்டும் அதைப் பரிசீலனை செய்து கஜானா அலுவலகத்தை நிரந்தரமாக்குவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது அங்கே கலெக்ஷன் டெப்போ மாதிரி ஒன்று இருக்கிறது. அது ரெகுலர் கஜானா அல்ல. ரெகுலர் ஸப் டிரெஷரியாக இருக்க வேண்டுமென்று சொன்னால்,

இண்டிபெண்டன்ட் ஸப் தாலூகாவாக இருக்க வேண்டும். இப்பொழுது அது ஒரு இண்டிபெண்டன்ட் ஸப் தாலுகாவாக இல்லை. ஆனால் இப் பொழுது பணம் கட்டுவதற்கு வசதி இருக்கிறது.

SRI S. THANGAVELU : அங்கே விவசாயிகளும், வியாபாரிகளும் அதிகமாக இருப்பதனால், சர்க்கார் கட்டணத் தொகைகளைக் கட்டுவதில் நெருக்கடி ஏற்படுவதனால், நிரந்தரமாக அங்கே கஜானாவை அமைப்பது மிகவும் அவசியமாகயிருக்கிறது. இப்பொழுது வாரத்திலே இரண்டொரு நாட்களுக்குத்தான் அது திறந்திருக்கிறது. ஆகவே நிரந்தரமாக இந்தக் கஜானாவை அமைப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி அவசியமாக இருந் தால் அதை ஒரு இண்டிபெண்டன்ட் சப் தாலூகாவாகச் செய்ய வேண்டும். அப்படி இண்டிபெண்டன்ட் ஸப் தாலூகாவாகச் செய்தால் உடனேயே அங்கு ஸப் டிரெஷரி ஏற்படும். எந்த அளவுக்கு அதை ஒரு இண்டி பெண்டன்ட் ஸப் தாலூகாவாகச் செய்ய முடியும் என்று இன்னும் தெரிய வில்லை. விண்ணப்பங்கள் கொடுத்திருந்தால், அவை பரிசீலிக்கப்படும்.

### *House Construction (Javadu Hills)*

*935 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் வட ஆற்காடு மாவட்டம் போளூர் தாலுக்கா ஜவ்வாது மலையில் உள்ளவர்களுக்கு எத்தனை வீடுகள் கட்ட அனுமதிக்கப்பட் டுள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : Ten houses are programmed for construction in the Javadu hills in Polur taluk during 1960–61.

SRI S. M. ANNAMALAI : சென்ற ஆண்டு, அதற்கு முந்தின ஆண்டு களில் செங்கம், திருப்பத்தூர் ஜவ்வாது மலை வாசிகளுக்கு வீடுகள் கட்டித் தரப்பட்டுள்ளன. போளூர் தாலூகாவிலே அதிகமான மலை வாசிகள் இருக்கிறார்கள். அவர்களுக்கு 10 வீடுகள் போதுமா ? எண்ணிக் கையை மேலும் அதிகப்படுத்துவதற்கு அமைச்சர் அவர்கள் முன்வரு வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : ஆதிவாசிகள் இந்த மாநிலத்திலே எங்கே இருந்தாலும் அங்கே அவர்களுக்கு இம்மாதிரி வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். கொஞ்சமாக இருக்கிறார்கள் என்ற காரணத்திற்காக அவர்களிடையே பாகுபாடு உண்டாக்கும் நோக்கம் அரசாங்கத்துக்குக் கிடையாது. மத்திய அரசாங்கம் 51 வீடுகள் கட்டிக்கொடுத்தார்கள். திருப்பத்தூர், செங்கம், வேலூர், கனியம்பாடி பிளாக்குகளிலே அவைகளைக் கொடுத்திருக்கிறார்கள். மீண்டும் தேவையானால் அரசாங்கம் உதவி செய்வதற்குத் தயாராயிருக் கிறது.

SRI S. M. ANNAMALAI : செங்கம் தாலூகா, திருப்பத்தூர் தாலூகா ஜவ்வாது மலை வாசிகளுக்கு இரண்டு மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து வீடுகள் கட்டிக்கொடுத்து வருகிறார்கள். ஆனால் போளூர் தாலூகாவிலுள்ள ஜவ்வாது மலை வாசிகளுக்கு 10 வீடுகள்தான் கட்டிக் கொடுக்கப்பட்டிருக் கின்றன. மேலும் 30 வீடுகளாவது கட்டிக் கொடுப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள். கலெக்டர் பார்த்து மேலும் அதிகமாக வீடுகள் கட்ட வேண்டுமென்று சிபார்சு செய்தால் கவனிக்கப்படும்.